குமரன்
ஆரம் 25, முத்து 16
December 05, 1947

Record no. 313

REGD NO. M. 1823 போன்: காரைக்குடி 64. மலேயாவில் 12-காசு
இந்தியாவில் 2-அணா

# குமரன்

வெள்ளி தோறும் வெளிவரும்

ஆரம் 25 | மகளிர் இல்லம், சர்வசித்து கார்த்திகை 20-வ (5—12—47) | முத்து 16

## உள்ளத்து உணர்ச்சி

(வித்துவான் மே. சுந்தரம், கோனபட்டு)

நம்மோடு தொடர்பில்லாத ஒருவரை நாம் கண்டால், அவருடைய கல்வி அறிவு கருதியும், செல்வம் கருதியும், புகழ் கருதியும் அன்னாரோடு நண்பினராகிவிடுகிறோம். நட்புச் செயலை இருவரிடையேயும் பிணைப்பது, ஒருவர் மற்றொருவர்பால் கண்ட சிறந்த பண்புகளே. இவைதாமும் அன்னாரை எதிர்ப்பட்ட விடத்தேதான் தோன்றி மலர்ந்து மண மளிக்கிறது. ஆனால் சில நட்புரிமைகள், ஆளை முன் பின் அறியாமலேயே அதாவது கண்ணால் அவர் உருவைக் காண்பதற்கு முன்னரே வளர்ந்து செழித்து வானளாவுகின்றன. இந்த நட்பு முறைகளை எந்த இனத்தில் அடக்கலாம்? ஒரு மங்கையைக் கண்ட அளவிலே காதல் கொள்ளுதல் இயல்பு. ஆனால் அவளைக் காணு முன்னரேயே எங்ஙனம் காதல் கொள்ள முடியும்? அப்படிச் செய்தால், அது, நாமே கற்பனை செய்த காதல் புரிவதாக அல்லவா பொருள் படும்! உள்ளத்திலே கற்பனை செய்து கொண்டு, காதல் செய்கின்றோமென்றால், அந்த உடலில் உயிர் இருக்காதே! ஆகையால் காதல் உணர்ச்சி உண்டாவதற்கும், அது கட்டுக்கு மீறி வளர்வதற்கும், காட்சி ஒரு காரணம் என்பது பெறப்படுகிறதல்லவா! அது போலத் தான் நட்பிற்கும். ஒருவனை எதிர்ப்பட்டால், உள்ளத்து உளதாம் உணர்ச்சி, நட்பாக உருக்கொள்ளுகிறது. இதே நட்பு உணர்ச்சி, எதிரில் ஆள் இல்லாத போதும் ஏற்பட்டு எழிலுறுகிறது. அதுதான் கேள்விச் செல்வம் மூலம் என்பதை அனைவரும் அறிவர்.

ஒருவருடைய செயற்கரிய செயல்களைக் கேள்விப்பட்ட மாத்திரத்திலோ, அல்லது அவருடைய புகழை அறிந்த மாத்திரத்திலோ, அவர்மீது தனிப்பட்ட நட்புக் கொண்டு, அந்நட்பும் நாளும் நாளும் வளர்ந்து அந்நட்புரிமையின் காரணமாக, இருவர் உள்ளத்து உணர்ச்சிகளும் ஒன்று பட்டு எங்ஙனமேனும் வாழ் நாளுக்குள் கண்டு அளவளாவிக் களிகூர வேண்டுமென்னும் எண்ணம் உண்டானவர்களை இக்காலத்துக் காண்டல் மிக அரிது. புலமையை அறிவார்கள்; புகழையும் கேட்டிருப்பார்கள்; ஆனால் இவைகளை உடையார் மீது தனிப்பட்ட அன்போ, நட்போ கொள்ள இக்காலத்தார் ஒருப்படுவதில்லை, உள்ளத்து உணர்ச்சி ஒன்றுமையின். ஆனால் பழங்காலத்தில், இத்தகைய கேள்வியே—கேட்டறிந்த அளவே—கேண்மையை மிகுதிப் படுத்தி, இரு நிலம் பிளக்க வேர் வீழ்த்தது.

ஒரு அரசனும் புலவனும் ஒருவரையொருவர் நேரில் காணாத அளவிலே பிரிக்க முடியாத நட்பைப் பெற்று விடுகின்றனர். எப்படி? ஒவ்வொருவரும் மற்றவருடைய புகழை-சிறந்த பண்புகளைக் கேள்விப்பட்ட மாத்திரத்திலே.

கோப்பெருஞ் சோழனும் பிசிராந்தையாரும், ஒருவர் மீது ஒருவர் உயர்ந்த நட்பைக் கொண்டு விடுகின்றனர், முன் பின் கண்டு உரையாடாத நிலையில். புலவரின் புலமைச் செல்வமும், புகழும் அரசனை ஈர்த்தன. அரசனின் அன்பும், ஆட்சித் திறமும் புலவரை, அரசன் மீது அடங்காத விருப்பம் கொள்ளச் செய்தது. இறக்கும் தருவாய் வரை, அரசன் அருந்தமிழ்ப் புலவரைக் காணவில்லை. காணாத காரணத்தால், காணவேண்டுமென்ற வேட்கை மிகுதியாயிற்று இறுதியில் வடக்கிருந்து உயிர்விடும் கட்டம் வந்தது. "புலவன் என்னை நாடி இப்பொழுது வருவான்; எனக்கு அருகில் அவனுக்கு ஒரு இடம் ஒதுக்குமின்" என அரசன், அருகிலிருந்த சான்றோரிடம் சாற்றினன். சான்றோர் ஐயுற்றனர். பிசிராந்தையார் அத்தருணம் அங்கு வருவதையும், அரசனுடன் சேர்ந்து உயிர் விடுவதையும், புலவனின் மாசிலா உள்ள உணர்ச்சி புரவலனிடம் கொண்டு சேர்த்தது, வாழ்வின் இறுதிக் கட்டத்தில். புவியரசன் புகன்றாங்கு, கவி அரசன் வந்து சேர்ந்தான், இல்லறைக்கு. கட்டித் தழுவிக் கண்ணீரால் கழுவிக்கொண்டனர் காவலனும் கன்னித் தமிழ்ப்புலவனும், இது வரை பாராத முகங்கள்! ஆனால் தொட்டுக் கொண்டிருந்த உள்ளங்கள்! ஒன்று சேர்ந்து தோன்றாத இரு உருவங்கள்! ஆனால் உணர்ச்சியில் தோய்ந்த உள்ளங்கள்! இந்தச் சந்திப்பில் வெளிப்படும் உணர்ச்சிப் பெருக்கை உரைக்க இயலாது வந்த புலவனும் வடக்கிருந்தான், வண்டமிழ் வேந்தனுடன். தமிழ், அவர்களை ஒருவரை ஒருவர் காணாத முன்னரே, காதல் கொள்ளச் செய்தது. அதே தமிழ்தான், உயிர் நீங்கும் காலத்தும் இருவரையும் ஒன்று படுத்தியது. சேர்த்த செந்தமிழுக்குப் பிரிக்க மனமில்லை போலும்! பிரிந்த அரசன் உயிரைப் பின் தொடர்ந்த புலவனின் நல்லுயிர், உலகிற்கு ஒன்றை உரைத்து உணர்த்திச் சென்றது!! உண்மையான உணர்ச்சியிலே ஒன்று பட்டவர்கள், உயிர் பிரியும் காலத்துக் கூட, ஒன்றாகவே பிரியாது செல்வர். நாட்டின் சேய்மையும், காலத்தின் நீட்டிப்பும் அவர்கள் உணர்ச்சி வெள்ளத்திற்கு அணை போட முடியாது என்பது தான், அது போகும் காலத்துப் பூவுலகத்திற்கு அறிவித்த செய்தி.

இந்நிகழ்ச்சிகளை எல்லாம் நேரிருந்து கண்ட பொத்தியார் என்ற புலவரின் கட்டிலடங்காத கருத்து உணர்ச்சிகள் யாவும், கோவையாகப் புறநானூற்றுப் பாடலாக உருக்கொள்கின்றன. அப்பாட்டில் புலவர் பொத்தியாரின், ஒன்றை ஒன்று விஞ்சிச் செல்லும் வியப் புணர்ச்சி நன்கு விளக்கப்பட்டிருக்கிறது.

"நினைக்குங் காலை மருட்கை உடைத்தே,
எனைப் பெருஞ் சிறப்பி னோடு ஈங்கிது
துணிதல்:
அதனினும் மருட்கை உடைத்தே, பிறன்
நாட்டுத்
தோற்றஞ் சான்ற சான்றோன் போற்றி
இசைமரபாக நட்புக் கந்தாக
இனையதோர் காலை ஈங்கு வருதல்;
வருவன் என்ற கோனது பெருமையும்
அது பழுதின்றி வந்தவன் அறிவும்
வியத்தொறும் வியத்தொறும் வியப் பிறந்
தன்றே;
அதனால், தன்கோல் இயங்காத்
தேயத்து உறையும்
சான்றோன் நெஞ்சுறப் பெற்ற தொன்றிசை
அன்னோனை இழந்த இவ்வுலகம்
என்னாவது கொல்? அளியது தானே"

(புறநானூறு 217)

இப்பாட்டு புலவரின் எல்லையற்ற வியப்பை எடுத்துக் காட்டுகிறது. புலவர்க்கு வியப்பினை அளிக்கும் நிகழ்ச்சிகள் பல. ஒவ்வொன்றாகப் பார்ப்போம்.

கோப் பெருஞ் சோழன், எண்ணிலடங்காப் பெருஞ் சிறப்புக்களுடன் கூடியிருந்து, குவலயம் ஆண்டாலும், அவைகளை யெல்லாம் அகம், புறம் இரண்டாலும் துவரத் துறந்து, நாடு நீங்கிப் புறங்காட்டில் வந்து உயிர் விடத் துணிதல், வியப்பினை அளிக்கும் முதல் செய்தியாகும். செயிரறு செங்கோல் செலுத்திய அரசன், மக்கள் செய்த மாணாச்செயலால் மானந்தாங்காது கானகம் போந்தது, நாட்டுக் காவலர்களின் வரலாற்று ஏட்டிலே காணமுடியாத ஒரு பகுதி. நாட்டை ஆளாத அரசன், காட்டையாவது ஆளாது இருந்திருக்கலாம். அங்ஙனமில்லை. கடுந்துயர் எய்திக் காட்டை அடைந்தான். அரசன், தன் அரசச் செல்வத்தை நீத்துக் காடு செல்லல், தமிழ்நாட்டு வரலாற்றிலே புதிது அன்று என்றாலும், இந்நிகழ்ச்சி மருட்கை உண்டாக்கவல்லது. தமையன் அரசாள வேண்டும் என்பதற்காகத் தன் உரிமை நீத்துத் தாங்கருந்தவ மேற்கொண்டு, கானகம் நண்ணிக் காவி உடை உடுத்த இளங்கோக்கள் பலர் இடம் பெறுகின்ற

(8-ம் பக்கம் பார்க்க)

காரைக்குடி விஸ்வநாதன் பிக்சர்ஸ் புரோப்ரைட்டர் திரு சா. மு. விஸ்வநாதன் செட்டியார் எழுதுவது:—

# சினிமா

## தயாரிப்போரும், விநியோகிப்போரும்

ஒரு சினிமாப் படம் மிக நன்ருக சகல அம்சங்களிலும் அழகாகவும், அருமையாகவும் அமைந்திருக்கின்றது என்று பார்த்தவுடன் அடுத்தாற்போல் தயாராகும் மற்ருெரு படமும் அதே மாதிரிதான் இருக்க வேண்டுமென்று எண்ணி, நிறைய லாபம் சம்பாதிக்க வேண்டுமென்று ஆசைகொண்டு, 'படம் எடுக்கத் தயாராகிறது' என்று தயாரிப்பவர் பத்திரிகையில் விளம்பரம் செய்கிருர். அதைக் கண்டவுடன் விநியோகம் செய்யும் ஜில்லா உரிமைக்காரர்கள் ஜில்லா உரிமைக்கு அட்வான்ஸ் கொடுத்துவிட்டுத் தாங்கள் எந்தெந்த ஜில்லாவுக்கு எந்தப் படத்தை விலைக்கு வாங்கியிருக்கிருேம் என்று விளம்பரம் செய்து அந்தப் பகுதிகளில் உள்ள தியேட்டர்களில் புக் செய்ய ஆரம்பித்துவிடுகின்றனர். தியேட்டரில் புக் செய்யும் போது தீபாவளி ரிலீஸ், பொங்கல் ரிலீஸ் என்று எழுதிக் கையெழுத்திட்டுவிட்டு நாள் நெருங்கியதும் படம் தயாரிப்பவரிடம் ஒரு நாளைக்கு நாற்பது தடவை வந்து வந்து படம் எப்பொழுது முடியும் எப்பொழுது முடியும் என்று அவசரப்படுத்துகிருர்கள். இவ்விதம் செய்வதினுல் உண்மையில் நன்ருகப் படம் தயாரிக்கும் முதலாளிகளுக்கு, அவகாசக் குறைவினுல் மட்டும் படத்திற்கு ஆபத்து ஏற்பட்டது என்று பூரணமாகச் சொல்லிவிட முடியாதென்ருலும், 90% டிஸ்ட்ரிபியூட்டர்கள் இவ்வளவு நெருக்காவிட்டால் படம் பிரமாதமாக இருக்கும். அவர்களுக்கு அதிர்ஷ்டமில்லை என்று பெட்டி நிறையப் பணம் பெற்றுக்கொண்ட பட முதலாளி சொல்லிவிட்டு இரண்டாம் வகுப்பில் ரயிலில் குற்ருலத்திற்குப் பிரயாணமாகிவிடுகிருர் கோடை நாளைப் போக்குவதற்கு! இன்னும் சில பட முதலாளிகள் டிஸ்ட்ரிபியூஷனுக்குக் கொடுக்காது சொந்தமாக வைத்துப் படங்களை நன்ருக எடுத்தால் என்ன என்று கேட்கலாம்? அதற்குப் பட முதலாளிகள் சரியானபடி நன்ருகக் கவனித்து முன் பின் வெற்றியடைந்த படங்களையே திரும்பத் திரும்ப ஈயடித்தான் காப்பி அடிக்காமல் புதிய நல்ல முறையில் சமூக முன்னேற்றத்திற்கும், ரசிகர்களின் திருப்திக்கும் தகுந்த முறையில் படம் எடுக்க வேண்டும். 4, 5 கம்பெனிகளைத் தவிர, பெரும்பாலும் படத்தைத் தயாரித்து லாபமோ, நஷ்டமோ டிஸ்ட்ரிபியூஷன்காரர்கள்—ஈயாகப் பறப்பவர்களிடம் கொடுத்து விட்டு அதிர்ஷ்டம், பாக்கியம் என்று சொல்லிவிட்டு ஆறுதல் சொல்லும் வண்ணமுள்ள பட முதலாளிகளே பலர். கண் தெரியாமல் டிஸ்ட்ரிபியூஷனுக்குப் பணத்தைக் கொடுத்துக் கவிழ்ந்தவரும் பல டிஸ்ட்ரிபியூட்டர்கள்.

ஆகவே புரொடியூசரும், டிஸ்ட்ரிபியூட்டரும் ஒன்று சேர்ந்து ஒரு மனப்பட்டு லாபத்தை மட்டும் கருதாமல் சமூக முன்னேற்றத்திற்கும், மக்களின் நல்ல திருப்திக்கும் ஆதரவளிக்கும் நிலையில் படம் தயாரிப்பாராக.

—

விசித்திர வனிதா, தன அமராவதி, ஜீவஜோதி, தேவதாஸி, மதனமாலா, கங்கணம், நாதவிஜயம், ஜம்பம், பில்ஹணன், முதலிய படங்கள் விரைவில் வெளிவரப்போகின்றன.

புனு பிரபாத் ஸ்டூடியோவில் எம். கே. தியாகராஜ பாகவதரின் ராஜமுக்தி தமிழ்ப் படம் வேகமாக வளர்ந்து வருவதாகவும், அதில் என். எஸ். கிருஷ்ணன், மதுரம் ஆகியோர் நடிப்பதாகவும் தெரிகிறது.

சென்னை சர்க்கார் தமாஷா வரியை 33–1/3 சதவிகிதம் உயர்த்தியிருப்பது வளர்ந்து வரும், நாடகப் படக் கலையைத் துண்டிப்பது போன்றதே. இப்பொழுது இருக்கும் வரி விகிதம் சுமார் 18 சதவிகிதத்திலிருந்து 20 வரை. இதில் மூன்றிலொரு பங்கை உயர்த்தினுல் 24 முதல் 27 சதவிகிதமாகும். ஆனுல் மசோதாப்படி, வரி விகிதம் 18-லிருந்து 50-ஆக உயர்த்தப்படுகிறது என்று பட உலகம் கண்டிக்கிறது.



### பிரிட்டிஷ் இளவரசியின் திருமணம்

பிரிட்டிஷ் இளவரசி எலிசபெத்தும், எடின்பரோ கோமகனும் இனி "தம்பதிகள்" என காண்டர்பரி ஆர்ச்பிஷப் நவம்பர் 20-உ காலை 11-45 மணிக்கு (இந்தியா மணிப்படி மாலை 5-15 மணி) கூறினர். இத்துடன் வெஸ்ட் மினிஸ்டர் ஆபேயில் விவாகச் சடங்குகள் அனைத்தும் முற்றுப் பெற்றன. கை கோர்த்துக்கொண்டு இளம் தம்பதிகள் மாதா கோயிலை விட்டு வெளிவந்த சமயம் மணிகள் விடாமல் ஒலித்தன. பின்னர் பக்கிங்காம் அரண்மனைக்குத் திரும்பிய தம்பதிகள் மக்களின் அன்புமிக்க ஆரவாரத்தை ஏற்பதற்காக பால்கனியில் பல நிமிஷ நேரங்கள் நின்றனர். 40 நிமிஷங்களில் ஊர்வலமும் விவாகச் சடங்குகளும் முற்றுப்பெற்றன.

—

### லெட்சுமிபுரம்

லெட்சுமிபுரம் மீனுட்சி சங்கத்தின் மாதக் கூட்டம் 26—11—47 மாலை 4 மணிக்கு திரு சொ. மு. பெ. ராம. ராமசாமி செட்டியார் அவர்கள் தலைமையில் ஆரம்பமாயிற்று. சொ. வி. மாணவ மாணவிகள் பாட்டு, பேச்சு, நடிப்பு, கும்மி நிகழ்த்தினர்

—

### சுதந்திர வாலிபர் சங்கம்

நவ 29 எரியூர் வாலிபர்கள் யாவரும் கூடி, நம் பாரதநாடு ராஜீய விடுதலை மட்டும்தான் அடைந்திருப்பதால், சமூக பொருளாதார விடுதலையடையவும், கல்வளர்ச்சி, உடற்பயிற்சி, ஒற்றுமை இவைகளைப் பெறவும் சகல முற்போக்கு சக்திகளுடனும் ஒத்துழைப்பதை குறிக்கோளாகக் கொண்டு, சுதந்திர வாலிபர் சங்கம் என்ற ஸ்தாபனத்தை ஏகமனதாக நிறுவி, ஏராளமாக அங்கத்தினர் சேர்த்தும், நிதி சேகரித்தும் கூடிய விரைவில், சங்க ஸ்தாபன இல்லமும், திறப்புவிழாவும் விமரிசையாக நடத்த மாற 9 செயலாளர்களைத் தேர்ந்தெடுத்துள்ளது.





# பர்மா விவசாயக் கடன்கள்

## 1951-க்குள் வசூலிக்கக் கூடாதாம்

—⊃⊂★⊃⊂—

### அதிக வட்டியும் கிடையாதாம்

### புதிய சட்டம் அமுல்

—: O :—

பர்மா சர்க்காரின் விவசாய இலாகா மந்திரி தக்கீன்டின் அவர்கள் 14-11-47-ந்தேதி பத்திரிகையாளர் சங்கக் கூட்டத்தில் விவசாயிகள் சம்பந்தப்பட்ட விஷயங்களை விளக்கமாக பத்திரிகை நிருபர்களுக்குக் கீழ்க் கண்ட பிரகாரம் தெரிவித்தார்.

விவசாயிகளின் நலனை முன்னிட்டு விவசாய சம்பந்தமாக வெளியிட்டிருந்த அறிக்கையை 1947 நவம்பர் 15-ந்தேதியுடன் சர்க்கார் வாபஸ் வாங்கிக் கொண்டு அதற்குப் பதிலாக அரசாங்க உயர்தர உத்தியோகஸ்தர்கள் 5 பேர் கொண்ட பர்மா விவசாய வியாபாரிகள் சங்கம் என்ற கமிட்டி ஏற்படுத்தியுள்ளனர். இக் கமிட்டிக்கு விவசாய இலாகா காரியதரிசி சேர்மனுக விளங்குவார். மற்றும் பல உயர்தர அதிகாரிகள் அங்கத்தினர்களாக இருப்பர்.

யுத்தத்திற்கு முன் குடியானவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்த கடன்களை குறைத்துவிட சர்க்கார் தீர்மானித்துள்ளனர். இது சம்பந்தமாக பஸபலாவில் தீர்மானஞ்செய்து, கொடுத்த கடனை குறைத்துவிட சட்டமியற்றப்பட்டு பர்மா கவர்னரின் கையொப்பத்திற்கு அனுப்பப்பட்டுள்ளது.

விவசாயிகளுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் கடனைப்பார்க்கும் போது ஏராளமாக இருக்கின்றபடியால் இக் கடனை, திருப்பிப் பூராவும் வசூல் செய்வதென்ருல்குடியானவர்களுக்கு மிகுந்த கஷ்டமேற்பட்டுவிடும். ஆகையால் அவைகளைக் குறைத்துவிட தீர்மானித்துள்ளோம்.

ஒரு விவசாயி யுத்தத்திற்கு முன் வாங்கியுள்ள கடனை இது வரையிலும் வட்டியும் முதலுமாக கொடுத்தும் கடன் இன்னும் தீர்ந்தபாடில்லை. ஆகையால் இப்பொழுது ஏற்படுத்தப்பட்டுள்ள சட்டப்படி பார்த்தால் விவசாயி ஒருவன் வாங்கியுள்ள முழுத் தொகைக்கு பிற்பாடு அவன் செலுத்தியுள்ள வட்டியும் முதலும் கணக்குப் பார்க்கும் போது கொடுத்த தொகையைவிட இவன் செலுத்திய வட்டி ஜாஸ்தியாக இருந்தால், கொடுத்த முதலில் பாக்கிப்படுவதாக வரும் தொகை குறைக்கப்பட்டுவிடும். வட்டியும் முதலும் சரியாகக்கொடுக்க முடியாத ஏழைக் குடியானவனுக்கு பூருவும் குறைக்கப்பட்டுவிடும்.

உதாரணமாக வாங்கிய கடன் 100 ரூபாய்க்கு, வட்டிமட்டும் 100ரூபாய் கட்டியுள்ள கடனுமுண்டு. 100 ரூபாய்க்கு மாதமொன்றுக்கு 3 ரூபாய் வட்டி யென்ருல் வருடத்திற்கு, 36 ரூபாய் வட்டி ஆகின்றது. இதற்கு தற்சமயம் சர்க்கார் தீர்மானித்துள்ளபடி 100 ரூபாய்க்கு வருடமொன்றுக்கு 6-4-0 ரூபாய் வட்டி போக அதில் மீதியாக வரும் ரூபாய், 30 கொடுக்கப்பட்டிருந்த கடனில் வரவு வைத்துக் கொள்ளப்படவேண்டும். இப்படி வரவு வைத்தது போக பாக்கிப்படும் தொகையை, 1951 டிசம்பர் 31-ந்தேதிக்கு பிற்பாடு தான் குடியானவனிடமிருந்து வசூல் செய்ய வேண்டும். இக் காலத்திற்கிடையில் பாக்கிப்படும் தொகைக்கு வட்டி வாங்கப்படமாட்டாது. மற்றும் பர்மாவில் நெல்விளையும் விவசாய நிலங்கள் 120 லட்சம் ஏக்கர் உள்ளன. இதில் 60 லட்சம் குடியானவர் கையிலும் மீதி 60 லட்சம் விவசாயி அல்லாதவர்களிடத்திலுமுள்ளன. அடுத்த வருடம் நிலங்கள் சேவாவுக்கு விடும் பொழுது சர்க்கார் சம்மதிக்கும் விவசாயிகளிடமே ஒப்படைக்க வேண்டும். விவசாயிகளிடமிருந்து வசூல் செய்யும் சேவா நிலவரியைவிட இரண்டு பங்கு வசூல் செய்யவேண்டும். உதாரணமாக 10 ரூபாய் ஓர் ஏக்கர் நிலத்திற்குவரி எனில் 20 ரூபாய் சேவா வாங்கவேண்டும் அல்லது 20 ரூபாய்க்குரிய நெல் வாங்கவேண்டும். இதற்காக இரங்கூன், மோல்மேன் வந்து சேர 300 ரூபாய் விலையாகவும் வெளியூர்களில் 285 ரூபாய் விலையாகவும் நெல் விலை ஏற்படுத்தப்பட்டுள்ளது.

### விவசாயிகள் பாங்க்

நான் மோல்மேன் பகுதிகளில் சுற்றுப் பிரயாணம் செய்து வரும் பொழுது அப் பகுதியிலிருந்து ஒரு மாத காலத்திற்குள் சுமார் 40 லட்சம் ரூபாய்க்குடைய நெல் அரிசிகள் அயல் நாட்டிற்கு வெளிபேறியுள்ளதாகத் தெரிகிறது. தற்சமயம் நாட்டில் நடந்து வரும் திருட்டு, கொள்ளையில்கூட 40 லட்சம் ரூபாய் நஷ்டமேற்படவில்லை. அப்படி நடக்கும் கொள்ளைகளும் ஏழ்மையின் காரணமாய் நடைபெறுகிறது. கொள்ளையிடப்பட்ட சொத்துக்களும் நம் நாட்டை விட்டு வெளியேருது. அப்படி இருந்தும் கொள்ளையடிக்கும் பேர்வழிகளுக்கும் சர்க்கார் மரண தண்டனை விதிக்க சட்டமியற்றி கடுமையான முறையை கையாண்டு வருகிருேம். இப்பொழுது நான் சொல்ல வேண்டிய தென்னவென்ருல் மில் சொந்தக்காரர்கள் 100 கூடை நெல்லுக்கு அறை கூலி 50 ரூபாய் கிடைக்கிறதென்று திருட்டுத்தனமாக அறைத்துக் கொடுப்பவர்களுக்கு இதேவித மரணதண்டனை விதிக்கப்படும். மற்றும் ஆற்று மார்க்கமாகவும், கடல் மார்க்கமாகவும் கள்ளத்தனமாகக் கொண்டு போகப்படும் அரிசிகளை கண்டு பிடிக்க பர்மா கடற்படைக்கு அதிகாரமளிக்கப்பட்டுள்ளது.

இப்படிக் கடுமையான நடவடிக்கைகளின் பேரில் தான் ஏழை விவசாயிகளுக்கு ஏற்பட்டுள்ள கஷ்டங்கள் 4, 5 வருடங்களுக்குள் நீங்கிவிடும். மற்றும் அரிசி வியாபாரத்தில் கிடைக்கும் ஆதாயத்திலிருந்து 1949 வருட ஆரம்பத்தில் 4 கோடி ரூபாயுடன் விவசாயிகளுக்கென்று ஓர் பாங்கி ஏற்படுத்தத் தீர்மானிக்கப்பட்டுள்ளது. இப் பாங்கியின் கிளை ஸ்தாபனங்கள் வெளியூர்களிலும் நிறுவப்படும். இப் பாங்கியில் பூராவும் விவசாயிகள் தான் பங்குதாரர்களாக இருக்க முடியும். வருடா வருடம் அரிசியிலிருந்து கிடைக்கும் ஆதாயங்கள் பூராவும் இப் பாங்கியில் விவசாயிகளுக்காகச் சேர்த்து வைக்கப்படும்.

### பர்மாவில் அன்னியர்களுக்குச் சொந்த நிலம் இருக்கலாமா?

#### பர்மா பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து விலகிக் கொள்ளுமா?

அடுத்த வருடம் ஜனவரி மாதத்தில் பர்மா சுதந்திர மசோதா அமுலுக்கு வரப்போவதால் அது முதல் பிரிட்டன் பர்மா ஒப்பந்தமும் அமுலுக்கு வரும். அதன் பின்னர் இந்தியா சர்க்காரும் பாகிஸ்தான் சர்க்காரும் கவனம் செலுத்த வேண்டிய பல பிரச்னைகள் பர்மாவில் எழப் போவது நிச்சயம். பர்மா பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து விலகி தனி தேசமாக விளங்குமாதலால் பர்மாவில் அன்னிய தேசத்தாருக்குச் சொந்த நிலங்கள் இருக்கலாமா என்ற கேள்வி எழப் போகின்றது. இந்தியா சர்க்காரும் பாகிஸ்தான் சர்க்காரும் இக் கேள்வியில் என்ன முடிவுக்கு வருவார்கள் என்பதை பொறுத்தே பார்க்கவேண்டும். "ரசிகரஞ்சனி" ரங்கூன்

—

### சென்னை மாகாணத்துக்கு அரசாங்கக் கவிஞர்கள்

தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், சமஸ்கிருதம் ஆகிய ஐந்து தென்னிந்திய பாஷைகளிலும் ராஜாங்கக் கவிகளை நியமிக்க சென்னை சர்க்கார் முடிவு செய்துள்ளனர்.

ஒவ்வொரு கவியும் 5 வருட காலத்திற்குப் பதவி வகிப்பார். ஒவ்வொரு கவிக்கும் வருடமொன்றுக்கு ரூபாய் 1,000 கௌரவப் படி சன்மானம் அளிக்கப்படும்.

கவிகளை நியமிக்க, நிபுணர்கள் கொண்ட ஒரு கமிட்டியை சர்க்கார் அமைப்பர்.

### சிறந்த எழுத்தாளர்களுக்குப் பரிசுகள்

தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய பாஷைகளின் இலக்கியங்களை அபிவிருத்தி செய்வதற்காக அப்பாஷைகளில் உள்ள சிறந்த எழுத்தாளர்களுக்கு ஒவ்வொரு வருஷமும் பரிசுகள் அளிக்க சென்னை சர்க்கார் முடிவு செய்துள்ளனர்.

பரிசளிக்கும் போட்டிக்காக அடியிற் கண்ட விஷயங்களில் ஏதேனும் 6 விஷயங்கள் நிர்ணயிக்கப்படும்:—

வசன நூல்கள், பிரயாணமும் பூகோளமும், சிறு கதை, காவலும் நாடகமும், பாஷா ஆராய்ச்சி, சரித்திரம் அல்லது பண்டைய இலக்கியம், விஞ்ஞானமும் ரஸாயனமும், இயற்கை விஞ்ஞான சாஸ்திரமும் விவகாரமும், பொருளாதாரம், அரசியலும் சமூக சாஸ்திரமும், கணிதம், வான சாஸ்திரமும் எஞ்சினியரிங் சாஸ்திரமும், குழந்தைகளுக்கான நூல்கள், கல்விபோதனு முறைகள், தத்வஞானமும் மனோதத்வ சாஸ்திரமும், வைத்யமும் ஆரோக்ய சாஸ்திரமும்.

### தமிழ் மொழி வாழ்க

குமரன்

சர்வசித்து ஞூ கார்த்திகை மீ 20-உ

## கலக்கம் தெளியுமா?

"சுயராஜ்யம் வந்துவிட்டது; சுயராஜ்யம் முழுதும் வராமல் கொஞ்சந்தான் வந்திருக்கிறது; வடக்கேதான் வந்திருக்கிறதே தவிர இங்கே வரவில்லை." இப்படியெல்லாம் பலர் பேசும்படி நமக்கு சுயராஜ்யம் வந்துவிட்டது. இந்த அதிர்ச்சியில் ஏற்படும் குழப்பங்கள் பலவாக இருக்கின்றன. வெள்ளைக்காரர் பிடுங்கலும் ஆதிக்கமும் தொலைந்தன. ஆனல் பதிலுக்கு வடநாட்டார் தென்னாட்டை வளைத்துக்கொண்டுவிட்டனர் என்ற கூக்குரல் செவிடுபடுகிறது. வடநாட்டான் யார்? அவனும் நம்முடைய சகோதரனல்லவா? என்று பதில் கூறப்படுவதை நாம் கேட்கிறோம். வெள்ளைக்காரன் புலி காடியின் இனத்தைச் சேர்ந்தவனல்ல. நம்முடைய ஒன்றுவிட்ட மனித சகோதரன்தான். ஆனலும் அவன் செய்த அநியாயம் பொறுக்க முடியவில்லை, போகச் சொன்னேம். வடநாட்டு சகோதரன் கழுகு மாதிரி காரியம் நடத்த ஆரம்பித்தால் நாம் செய்வதென்ன? சென்னையைப் பார்க்கலாம். ஒரு இருபது ஆண்டுகட்கு முன்பு சென்னை தமிழர்களின் சென்னையாக இருந்தது. இப்பொழுது தலைப்பு மாறியிருக்கிறது. தெலுங்கர் ஏதோ சமீப எல்லையை உத்தேசித்து 'மனதே' வழக்குக் கோலுகிருர்கள். ஆனல் அங்கே போராதிக்கம் வகிப்பது வடநாட்டாரென்பதை உணரவேண்டும். வடநாட்டு வியாபாரிகள் உள்பகுதியிலுள்ள சிறு பட்டினங்களிலும் புகுந்து வியாபாரத் துறையில் ஆதிக்கம் பெற்று வருகின்றனர். வடநாட்டுப் பாங்கிகள் பல வேரூன்றியிருக்கின்றன. வடநாட்டார் கம்பனிகளில் நம்முடைய மூலதனம் குவிந்திருக்கிறது. சென்னை மார்க்கெட்டுக்கு இறகு கிடையாது. பம்பாய் மார்க்கெட்டும், கல்கத்தா மார்க்கெட்டும் சென்னை மாகாணத்தின் குரல்வளையில் கை வைத்துக் கொண்டிருக்கின்றன வென்றல் அது மிகைப்பட்ட செய்தியல்ல.

ஆந்தையெங்களிப் பாகுபடும்போது தெலுங்கோடு தனிப்பட வேண்டுமென்று அன்பர் பலர் விரும்புகின்றனர். இந்த இயக்கம் நாட்டில் அரும்பி எழுகின்றது. இந்த வடநாட்டுப் பிடியிலிருந்து கழலுவதற்குத் தென்னாட்டு சமஷ்டி தேவை என்பதொரு வாதம்.

தெலுங்கர்களையும், மலையாளிகளையும் பக்கத்தில வைத்துப் பார்க்கும்போது இந்த இருவரையும் விட வடநாட்டான் கெட்டவனுகப் பலருக்குப் படவில்லை. தம்மையும் தமிழனையும் ஒட்டுமொத்தமாக வடநாட்டான் தெலுங்கர்களையும் மலையாளிகளையும் எப்படி சமதானுக எண்ணி உடன் வைத்துக் கொள்வதென்று மிரளுவது ஆயல்புதான். மலையாளிகள் அங்கு உள்ள தமிழர்களோடு மூண்டித் தயரப்படுத்தகிற செயற வரவரப் பெரிய அளவில் வந்துகொண்டிருக்கிறது. தெலுங்க சகோதரர்கள் பிராதக்கானண்டுபோகப் படுகிற பாடு பெரும்பாடென்பதைச் சொல்ல வேண்டுமா? வசாகபட்டினத் துறைமுகமும் சென்னைத் துறைமுக நகரும் தங்கட்கு வேண்டுமாம். ஏதாவது புத்தி லவலேசமாவது இருக்கிறதா என்று கேட்கிறோம். இப்படிக் கேட்கிற தெலுங்களை வங்காள மாகாண எல்லைக்கு அப்புறம் துரத்தி ஒழித்துக் கட்டவேண்டுமென்று தானே தோன்றும். இந்தப் பகை உணர்ச்சி போகும் வழி யென்ன? நாலு பேச்சு மக்களும் ஒன்று சேர்ந்து வாழ்வதெப்படி?

ஒன்ருக இருந்த முஸ்லிம்கள் எல்லைப்பிரிவு செய்தது முதல் தீராப் பகைவரென்று கதறும்படி நிலைமை ஆகியிருக்கிறது. உள்ள நிலைமையே கவலைக்கு நிலைக்களமாகி, தீர்ப்புக்கு வரமுடியாமல் கலங்கி நிற்கும்போது ஆளுக்கொரு' கட்சி அதற்கொரு கூட்டம் பல அங்கங்கள் தோற்று விக்கப்பட்டு தமிழ்நாடு சீரழிவதைக் காண உண்மை யபிமானமுள்ள எவருக்கும் கண்ணீர்தான் வரும்.

இத்தனைக்கும் அடிப்படைக் காரணமொன்றிருக்கிறது. தமிழ் மக்கட்கு நினைப்புசக்தி அதிகம். செயல் சக்தி குறைந்திருக்கிறது. அன்று முதல் இன்றுவரை எவனிடமாவது அகப்பட்டுக்கொண்டு தவிப்பது இயல்பாகி வருகிறது. இதைப் பாரதியார் அழகாகச் சொன்னர். "என்றுதணியும் எங்கள் அடிமையில் மோஹம்" என்றும் "பிறர் காட்டிய வழியில் சென்று மாட்டிக்கொள்வார்" என்றும் கூறினர். பல ஆண்டுகட்கு முன்பு பெரியார் பிரசங்கம் முடிந்தவுடன் ஒருவர் வந்து "சாமியைக் கும்பிடவேண்டாம் என்றுல் வேறு எதைக் கும்பிடுகிறது" என்று கேட்டார். சரிதான நம்முலடைய நிலை! கலக்கமும் சக்தியற்ற தன்மை மோகமும் ஒழியுமா? தமிழ்க்கடல் தெளியுமா?

### திரு. சபாரெத்னம் செட்டியார் பிரிவு

கானடுகாத்தான் திருவாளர் சா. ராம. சித. சபாரெத்னம் செட்டியார் நவம்பர் 30-உ கானடுகாத்தானில் காலஞ்சென்ருர். பிரபல குடும்பத்தில் பிறந்தவர். இவருடைய முன்னேர்கள் திருவானைக்காவல் கோயிலைப் புதிப்பிக்கப் பல லட்சம் செலவு செய்திருக்கிருர்கள். இவர் அந்தக் காலத்திலேயே இண்டர்மீடியட் வரை படித்தார். பணத்தில் மிகவும் அழுத்தமானவர். இந்தியன் பாங்க் டைரக்டராக ஐந்து முறை இருந்திருக்கிருர். திருச்சினப்பள்ளிப் பாங்கியை அவர் ஆரம்பித்தார். அதன் நிர்வாகக் குழுவின் தலைவராக கடைசிவரை இருந்து வந்தார். சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன் விவசாய மோட்டார் வான் இரண்டை விவசாய இலாகாவுக்கு நன்கொடையளித்தார். ராவ்பகதூர் பட்டத்தை அரசாங்கத்தினர் வழங்கினர். சுமார் 15 ஆண்டுகளுக்கு முன்னல் லால்குடி ஹரிஜன ஹாஸ்டலுக்கு 20,000 ரூபாய் கொடுத்தார். அப்பொழுது அரசாங்கத்தினர் திவான்பகதூர் பட்டம் கொடுத்தனர். நிறைந்த தனிகராகவும், மிகுந்த வருவாயுள்ளவராகவுமிருந்தும், தான தருமங்களுக்கு நல்கவில்லை. இந்தியன் பாங்கி டைரக்டர்கள் கூட்டத்திற்குப் போகும் பொழுதும்கூட மூன்றும் வகுப்பில்தான பிரயாணம் செய்தார். ரங்கூன் நகர வீட்டுத்திண்ணையில் பிரப்பம் பாயின்மேல் கையைத் தலைக்கு வைத்துப் படுத்திருப்பதைத் தொன்றே அவருடைய எளிமையைக் காட்டும். இரண்டு தம்பிகள் இருக்கின்றனர்; அவர்களுள் சென்னையில் பிரபலமடைந்து வரும் ட்ரோஜன் அண்ணமலை செட்டியார் ஒருவர். ஆண் மக்கள் இருவர் இருக்கின்றனர். வயது சுமார் 48 இருக்கும்.

### கவிமணியின் தேகநிலை

கவிமணி திரு தேசிகவிநாயகம் பிள்ளையின் உடல் நிலை நோய்வாய்ப்பட்டு குணமடையாமலிருந்து வருகிறது. மிகப் பலஹீனம்!

## விருதுநகர் மாதர் சங்கம்

இச்சங்கத்தின் 14, 15 வது ஆண்டுகளின் ஆண்டுவிழா 7—12—47 ல் தஞ்சை சப்ஜட்ஜ் எஸ். நடராஜன் அவர்கள் துணைவியார் நா. புஷ்பம்மையார் தலைமையில் நடைபெறும். உயர்நிலைப்பள்ளி தலைமை ஆசிரியை நிலகவதி பால் அம்மையார் B. A. L. T. அவர்கள் சங்கத்தின் புதுக் கட்டிடத்தைத் திறந்துவைப்பார்கள். குழந்தைகள் பள்ளிக்கூடத்தை திருமதி மு. மரகதவல்லி அம்மையார் அவர்கள் துவங்கி வைப்பார்கள். பல விரிவுரைகளும் குழந்தைகளின் ஆடல் பாடல்களும் நடைபெறும்.

### டில்லிக்குப் புதுக்கோட்டைக் காவடி

திருவாளர்கள் கே. எம். வல்லத்தரசு, வி. கிருஷ்ணமூர்த்திஐயர், இன்னும் நால்வர் கொண்ட புதுக்கோட்டை சமஸ்தான காங்கிரஸ் தூதுக்குழுபுதுடில்லியில்டாக்டர் பட்டாபி சீதாராமய்யாவையும், திரு சங்கர் ராவ் தேவையும், டிசம்பர் 2-உ சந்தித்துப் பேசினர். சர்தார் படேலையும் சந்தித்து, சமஸ்தான சீர்திருத்தம் பற்றி விவாதிப்பர் எனத் தெரிகிறது. சமஸ்தான மன்னர் சார்பாக, உணவு மந்திரி திரு வி. பாலகிருஷ்ணன் புதுடில்லி சென்றுள்ளார்.

### ஜில்லா வைத்திய அதிகாரிக்குப் பிரிவு உபசாரம்

நவ 28 உ தேவகோட்டை ரஸ்தாவிலுள்ள தேவகோட்டை இளைய ஜமீந்தாரும் முனிசிபல் நகரசபைத் தலைவருமான அழ. அரு. சோமநாதன் செட்டியார் அவர்கள் பங்களாவில் ஓய்வுபெற்றுச் செல்லும் ராமநாதபுரம் ஜில்லா மெடிகல் ஆபீசர் டாக்டர் கே. எஸ். வெங்கடாசல ஐயர் M. R. C. S. (Eng) L. R. C. P. (Lond) அவர்களுக்கு, பிரிவுபசாரம் நடைபெற்றது. திருவாளர்கள் சோமநாதன் செட்டியார், கல்லல் ஆ. மு. முருகப்ப செட்டியார், க. வெ. சித. வெங்கடாசலம் செட்டியார், ஜில்லா போர்டு இன்ஜினீயர் ஆகியோர் விருந்து நடத்தினர். சிற்றுண்டி விருந்துக்குப் பின்னர் சோமநாதன் செட்டியார் அவர்களும், காப்டன் ராஜகோபாலன் அவர்களும், வெங்கடாசலம் ஐயர் அவர்களையும், தேவகோட்டையிலிருந்து மாறிச் செல்லும் சப்கலெக்டர் திருV. சேது ஐயர் அவர்களையும் பாராட்டி அவர்களுடைய சேவையைப் புகழ்ந்து பேசினர். விருந்தினர் இருவரும் நன்றி செலுத்தினர்கள். உத்தியோகஸ்தர்களும், பிரமுகர்களுமாக பலர் வந்திருந்தனர்.

### சர்க்கரை இருப்பு

சர்க்கரைக் கட்டுப்பாடு ரத்து உத்தரவு டிசம்பர் முதல் அமுலுக்கு வருவதை முன்னிட்டு நவம்பர் 30-உ திருப்பத்தூர் தாலுகாவிலுள்ள மொத்த விற்பனை வியாபாரிகளிடமிருந்த சுமார் 450 மூட்டை சர்க்கரை இருப்பை, டிப்யூடி தாசில்தாரால் தேக்கி வைக்கப் பெற்றுள்ளது. கலெக்டர் உத்தரவு கிடைத்த பின் விலைக்கு விற்கவேண்டுமென்று வியாபாரிகளிடம் எழுதிவாங்கப்பட்டுள்ளது.

### ஒரு லட்சம் நூதன ரேடியோ ஸெட்டுகள்

இந்திய சர்க்கார் பெருத்த அளவில் ரேடியோ ஸெட்டுகளைத் தயாரிக்கும் எலெக்ட்ரோனிக் சாதனங்களைக் கொண்டு ஒரு லட்சம் ரேடியோ ஸெட்டுகள் தயாரித்துத் தரவேண்டுமென பிரிட்டனுக்கு ஆர்டர் கொடுத்துள்ளனர்.

## வைத்தியநாதய்யர்மீது ஒழுங்கு நடவடிக்கை

ஜமீந்தாரிகளை ஒழிப்பதற்கு சென்னை சர்க்கார் உத்தேசித்திருப்பவைகளை மதுரை ஏ. வைத்தியநாதய்யர் எதிர்த்து சட்டசபையிலும், வெளியிலும் பிரசங்கங்கள் செய்து வருவதால் அவர்மீது ஏன் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கக் கூடாதென்று அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி அவரைக் கேட்டிருப்பதாகத் தெரிகிறது.

### பள்ளிகளில் திருக்குறள் பாடமாக்கப் பெற்றது

சென்னை மாகாணத்திலுள்ள நடுத்தரப் பள்ளிக்கூடங்களுக்கு சென்னை கல்வி இலாகா அதிகாரி விடுத்துள்ள அறிக்கையில் எந்தெந்தப் பள்ளிக்கூடங்களில் தமிழில் பாடங்கள் போதிக்கப்படுகின்றனவோ அவற்றில் 1947-48 லிருந்து முதல் பாரத்திலிருந்து 5 வது பாரம் வரையிலும் 50 முதல் 100 வரையில் திருக்குறள் பாட்டுக்களை படிப்படியாகக் கற்றுக் கொடுக்கவேண்டும் என்றும், இத்திட்டம் சென்னை சர்வகலாசாலை பிரசுரிக்கும் எஸ். எஸ். எல். ஸி. பாடப் புத்தகத்தில் சேர்த்துக்கொள்ளப்படுமென்றும் கூறியுள்ளார்.

### 2 கோடி கஜம் பிரிட்டிஷ் துணி

அடுத்த 3 மாதங்களுக்கு 2 கோடி கஜம் பருத்தி, காா்பட்டு துணிகள் உலகத்தின் பல பாகங்களிலும் விற்கப்படுமென, பிரிட்டிஷ் பருத்திக் கட்டுப்பாடு போர்டு அறிவித்துள்ளது. இந்தத் துணி விற்பனை மூலமாக டாலர் பிராந்தியங்களிலிருந்து 50 லட்சம் டாலர்களும், ஸ்டர்லிங் பிராந்தியங்களிலிருந்து 30 லட்சம் பவுனும் கிட்டுமாம்.

### மலாயாவுக்கு நல்லெண்ணத் தூது கோஷ்டி

அகில மலாயா செட்டியார் சங்க சார்பாக ஒரு நல்லெண்ண தூது கோஷ்டி மலாய் நாட்டுக்கு அடுத்த வாரம் செல்ல இருக்கிறது. அந்தத்தூது கோஷ்டியில் பின் வரும் பிரமுகர்கள் செல்வார்களென்று அறிகிறோம்.

1. க. வீ. அழ. மு. ராமனுதன் செட்டியார் (கோட்டையூர்)
2. மெ. செ. மெ. மெ. மெய்யப்ப செட்டியார் (காரைக்குடி)
3. சா. கணேசன் (காரைக்குடி)
4. சா. லெ. நா. சாத்தப்ப செட்டியார், (காரைக்குடி)
5. ப. வ. ராம. குழந்தையன் செட்டியார் (ராயவரம்)
6. மு. அ. மு. முத்தாமன் செட்டியார் (ராயவரம்)
7. R. M. S. ராமசாமி செட்டியார் (ராயவரம்)
8. பி. கு. கா. குமரப்ப செட்டியார் (இராமச்சந்திரபுரம்)
9. எஸ். சீனிவாசன் வக்கீல், சென்னை.
10. பெரி. அழகப்பன் (பள்ளத்தூர்)
11. அ. மு. மு. முருகப்பசெட்டியார் (பள்ளத்தூர்)

### தமிழாசிரியர்களின் துக்க வாரம்

நவம்பர் 23-உ கம்பம் தமிழாசிரியர்களின் துக்க வாரம் கடைசி நாள் கூட்டம் கம்பம் கோட்டை மைதானத்தை அடுத்து நடைபெற்றது. திரு சுவாமி அறிவானந்தா தலைமை வகித்தார். பின்னர், திரு பெ. நாராயணசாமி பாரதி, கி. த. சுருளியாண்டி முதலிய பலர் பேசினர். சில தீர்மானங்கள் நிறைவேறின.



## வகுப்புவாரி முறையில் மாறுதல்

வகுப்புவாரி அடிப்படையில் ஆள் திரட்டப்படும் சர்விஸ்களுக்கு நியமனங்கள் செய்வது பற்றிய விதிகளை சென்னை சர்க்கார் மாற்றியுள்ளனர். இப்போதைய விகிதாசாரப்படி 12 ஸ்தானங்களிருந்தால் பிராமணரல்லாத இந்துக்களுக்கு 6, பிராமணருக்கு 2, முஸ்லிம்களுக்கு 2, ஆங்கிலோ இந்தியர் அல்லது இந்திய கிறிஸ்துவருக்கு 2, ஹரிஜனுக்கு 1. ஹரிஜனங்களுக்கு ஜனத் தொகை அடிப்படையில் சேர வேண்டியதை விடக் குறைவாகக்கிடைப்பதால்பின் வருமாறு மாற்றங்கள் ஏற்பாடு செய்துள்ளனர். மொத்தம் 14 ஸ்தானங்களில் பிராமணரல்லாத இந்துக்களுக்கு 6, பிற்போக்கு இந்துக்களுக்கு 2, பிராமணர்களுக்கு 2, ஆங்கிலோ இந்தியர் அல்லது இந்திய கிறிஸ்தவருக்கு 1, முஸ்லிமுக்கு 1, ஹரிஜனங்களுக்கு 2.

விகிதாசாரத்தில் மாறுதல் செய்யப்பட்டுள்ளதையொட்டி, வகுப்புவாரி முறையிலும், அடியிற் கண்டவாறு மாறுதல் செய்யப்பட்டுள்ளது. 14 காலி ஸ்தானங்கள் இருந்தால் வகுப்புவாரி முறை பின்வருமாறு:—

1. பிராமணரல்லாத இந்து
2. ஹரிஜன்
3. பிற்போக்கு வகுப்பு இந்து
4. பிராமணரல்லாத இந்து
5. பிராமணர்
6. பிராமணரல்லாத இந்து
7. முஸ்லிம்
8. பிராமணரல்லாத இந்து
9. ஆங்கிலோ இந்தியர் அல்லது இந்திய கிறிஸ்தவர்
10. பிராமணரல்லாத இந்து
11. ஹரிஜன்
12. பிராமணரல்லாத இந்து
13. பிராமணர்
14. பிற்போக்கு வகுப்பு இந்து

மேற் கூறப்பட்டுள்ள முறை உடனடியாகவே அமுலுக்கு வருகிறது. அதாவது இந்த அறிக்கை விடப்படும் தேதிக்குப் பிறகு ஏற்படும் முதல் காலி ஸ்தானத்துக்கு இப்புது முறைப் பிரகாரம் ஒரு பிராமணரல்லாத இந்து நியமிக்கப்படுவார்.

### கந்தர் சஷ்டி விழாக் கழகம் தேவகோட்டை

12-11-47 முதல் 20-11-47 வரை ஒன்பது தினங்களும் தேவகோட்டை கந்தர் சஷ்டி விழாக் கழகத்தின் சார்பாக சிவாலயக கந்தர் சஷ்டி விழாவில் விரிவுரை நிகழ்ச்சிகளும், இன்னிசை விருந்துகளும் நடைபெற்றன. திருவாளர்களான சாத்தூர் சுப்பிரமணியம், மதுரை எஸ். சோமசுந்தரம், கானகலாதர மதுரை மணி ஐயர், டி. எம். தியாகராஜன், திருப்பாம்புரம் சுவாமிநாத பிள்ளை, திருவாவடுதுறை ஆஸ்தான வித்துவான் மாயவரம் கோவிந்தராஜ பிள்ளை, பாபநாசம் பால சரஸ்வதி, கண்டதேவி அழகர்சாமி, பழனி சுப்பிரமணியம், ராமதாஸ் ராவ், சி. டி. லெட்சுமணன் செட்டியார், சி. எஸ். முருகபூபதி, என். சுந்தரராஜ ஐயங்கார் ஆகியோர் இன்னிசை நிகழ்ச்சிகளிலும், தருமபுரம் ஆதீன வித்துவான் பாலகவி வே. இராமநாதன் செட்டியார், கிருபானந்தவாரியார், வித்துவான் மறைமலை திருநாவுக்கரசு, புலவர் சுவாமிநாதன், கோவில்பட்டி சிவக்கிழார், வா. திருநாவுக்கரசனர், பண்டித பூமிநாதம் ஆறுமுக நாவலர் ஆகியோர் விரிவுரை நிகழ்ச்சிகளிலும் கலந்து கொண்டனர்.

## கோனபட்டில் துணிகரக் கொள்ளை

(நமது நிருபர்)

இவ்வூரில் திருவாளர் மெ. மு. மு. அ. முத்தையா செட்டியார் அவர்கள் வீட்டில் சென்ற திங்களன்று மாலை சுமார் 7 மணிக்கு விசேஷ உடையில் 13 பேர் துப்பாக்கி, கத்தி, அரிவாள், கட்டி சகிதம் புகுந்தனர். செட்டியாரை அடித்துக் காயப்படுத்தி இரும்புப் பெட்டியைத் திறக்கச் சொல்லி ரூ47775 மதிப்புள்ள நகைகளை எடுத்துக்கொண்டு போய்விட்டனர். கொள்ளை நடக்கும்பொழுதே ஜனங்கள் தெரிந்து கோயிலில் உள்ள அபாயச் சங்கை ஊதி ஜனங்களைத் திரட்டிவிட்டனர். பல நூறு ஜனங்கள் அவ்வீட்டைச் சுற்றிலும் வீதியிலும் கூடியிருந்தும் கொள்ளையைத் தடுக்க முடியவில்லை. காரணம் ஏராளமான குண்டு வைத்திருந்து, பெரிய பாட்டரி லைட்டின் உதவியால் சுட்டுக் கொண்டேயிருந்ததுதான். துப்பாக்கிச் சூட்டையும் லட்சியம் செய்யாமல் சிலர் மேல் விழுந்து, பிடிக்க ஆரம்பித்திருக்கிருர்கள். அதன் பயனுக 23 பேருக்குப் பலத்த காயமேற்பட்டிருக்கிறது. கடைசியாகத் தொடர்ந்து சென்று விரட்டி ஒரு ஆளைப் பிடித்துவிட்டார்கள். அவன் பூசாரிபட்டி சித்தன் என்ற தொத்தன் ஆசாரி. அவனிடம் ஒரு சங்கிலியும் மோதிரமும் இருந்து கைப்பற்றப்பட்டிருக்கிறது. போலீசார் தீவிரமாகக் கண்டுபிடிக்க முயன்று வருகிருர்கள்.

### அமர்க்களம்

சென்ற திங்களன்று மாலை 7 மணி சுமாருக்கு சிலர் மெயின்ரோடு வழியாக ஊருக்குள் போனர்கள். அவர்களைப் பார்த்த ஒருவர், இவர்கள்யார்? எங்கே போகிருர்கள் என்று கேட்டார். பக்கத்தில் நின்ற மற்ருெருவர் 'ஸ்கவுட்! எங்கேயாவது போவார்கள்' என்று சொன்னர். ஆனல் அவர்கள் ஸ்கவுட் அல்ல என்பது முத்தையா செட்டியார் வீட்டுக்குள் போன பிறகு தான் தெரிந்தது. அந்த வீட்டிற்குள் அந்தக் கொள்ளைக் கூட்டத்தினருக்கு முதலாவது எதிர்ப்பட்டவர் கீழச்சிவல்பட்டி சாஸ்திரி. அவர் கழுத்தில் கிடந்த சங்கிலியையும் சட்டைப்பையிலிருந்த கோட்டையும் அடித்துப் பறித்துக் கொண்டு தள்ளிவிட்டு பக்கத்திலிருந்த மற்ருெருவரையும் அடித்து "பேசாமல் இரு" என்று பயமுறுத்தும் போதுதான நாற்காலியிலிருந்த வீட்டுக்காரருக்கு வந்தவர்கள் திருடன் என்று தெரிந்தது. அதற்குள்ளே அவர் தலையில் ஓங்கிய அரிவாள் பின்பகுதி விழுந்தது. ரத்தம் பீறிட்டது. அவர்கள் சொன்னபடி இரும்புப்பெட்டியைத் திறந்து விட்டார். நகைகளை எடுத்துக்கொண்டிருந்தனர். இதற்கிடையில் வீட்டுக்காரா மனைவி மெதுவாக ஒரு அறைக்குள் சென்று தாழிட்டுக்கொண்டார். தோசை சுட்டுக்கொண்டிருந்த சமையற்காரனுக்கும் அடி. இது நடந்து கொண்டிருக்கும் பொழுது விஷயம் பக்கத்து வீட்டுக்கும் அடுத்திருந்த கல்யாண வீட்டுக்கும் தெரிந்து விட்டது. பலர் வந்தனர். கோயிலில் உள்ள அபாயச்சங்கு ஊதப்பட்டது. கார்த்திகை சோமவாரத்துக்குக் கோயிலுக்கு வந்திருந்த கூட்டம் அப்படியே திருட்டு நடந்த வீட்டை நோக்கித் திரும்பியது. சில திருடர்கள் வாயிலில் நின்று கொண்டிருந்தனர். கூட்டம் வரவே துப்பாக்கியால் சுட்டுக் கொண்டேயிருந்தனர். ஜனங்கள் நெருங்க முடியவில்லை. பக்கத்திலிருந்த பாலத்திற்குள் சிலர் மறைந்திருந்து கற்களைக் கொண்டு அவர்கள் மேல் வீசினர். குண்டு வரும்பொழுது பதுங்கிக் கொண்டும் பிறகு எழுந்து கல்லால் எறிந்து கொண்டும் இருந்தனர். பலர் கற்களை சேகரித்துக் கொண்டிருந்தனர். நகைகளை எடுத்து முடியும் பொழுது கூட்டம் ஆபிரத்துக்கு மேலாகி விட்டது. "முழங்காலுக்குக் கீழே சுடு! ஆளைக்கொன்று விடாதே" என்று தலைவன் எச்சரித்துக் கொண்டிருந்தான். இதைக் கேட்ட பிறகு கொல்லமாட்டான் என்ற தைரியம் சிலருக்கு வந்தது. பொருள்களைத் தூக்கிக் கொண்டு பொருள் வைத்திருப்பவன் நடுவிலும் அவனைச் சுற்றி மற்றவருமாகச் சுட்டுக்கொண்டும் டார்ச் லைட் காட்டிக்கொண்டும், நடந்து சென்றனர்.

முன்னும் பின்னுமாகச் சுட்டுக் கொண்டே போனதால் ஜனங்கள் தொடர முடியவில்லை. ஜனங்களைத் தாண்டினவுடன் ஓட ஆரம்பித்தனர். சுடுகாட்டுப் பக்கம் துணிவுள்ளவர்களெல்லாம் தொடர்ந்து ஓடினர். "ஒருவனுடைய சொத்தை எடுத்துக் கொண்டு போனல் எண்டா இவ்வளவு பேரும் விழுந்து சாகிறீர்கள்" என்று சொல்லிக் கொண்டே ஓடினர். பக்கத்தில் வேலி அடைத்திருந்த திருகுகள்ளியை வெட்டி வழியில் போட்டுக் கொண்டே ஓடினர். பின்னலே பிடிக்கச் சென்றவர்களுக்கு ஓட முடியாமல் பெருத்தடையாயிருந்தது என்றுலும் விடவில்லை. சூடுபட்ட காயம், காலில் முள் தைத்த காயம் இவைகளிலிருந்து வழியும் ரத்தத்தோடே ஓடினர். திருடர்களுக்கும் காயம் லேசல்ல. கல்லடிபட்ட கால்களிலிருந்து ரத்தம் சொட்டிக் கொண்டிருந்தது. வேலிகளைத் தாண்டிக்கொண்டு ஓடினர். I. N. A. மெய்யப்பனிடம அகப்பட்டான் ஆசாரி சித்தன் என்ற தொத்தன். மற்றவர்களும சேர்ந்துகொண்டனர். பிடித்த ஒருவரின் கையை ஆசாரி விழுந்த பலமாகக் கடித்தான். ஒருவர் ஆசாரி விலாவில் எலும்பு நொறுங்கும்படி ஒரு மிதி கொடுத்தார். வாய் விரித்தது. பிடித்துக் கொண்டு வந்து சேர்த்தனர். வெகுநேரம் வரையில் அவனுக்கு உடம்பில் ஆட்டம் இருந்தது. விடியுமட்டும் ஜனங்கள் தூங்கவில்லை. போலீஸ் உடனே வரவழைக்கப்பட்டது.

(இவை ஜனங்களிடமிருந்து கிடைத்தவை)

### சபாஷ் கோனபட்டு!

திருடர்கள் என்று சொன்னல் கேட்டவுடனே கதவைச் சாத்தி பக்காவாக தாள்போட்டுக் கொள்ளுதல்தான் சாதாரண ஜனங்களின் பழகம். காரணம் பயமட்டுமல்ல, தங்கள் சொத்துக்கள் பந்தோபஸ்தாக இருக்க வேண்டுமென்பதற்குத்தான்.

திங்கட்கிழமைக் கொள்ளை விஷயம் லேசானதல்ல. துப்பாக்கி கொண்டு மாலை 7 மணிக்கு ஜனங்கள் முழுமையும் விழித்திருக்கிற நேரத்தில் புகுந்து கொள்ளையடிக்க முற்பட்ட துணிச்சல் மிகப் பெரிது. ஊர் ஜனம் முழுமையும் திரண்டு வந்தாலும் சுட்டுத்தள்ளிவிட்டுச் சென்றுவிடலாம் என்ற தைரியத்தில் முன் எச்சரிக்கையோடு வந்த கூட்டம் அது. அந்தக் கொள்ளைக் கூட்டத்தை எதிர்த்து துப்பாக்கி சூட்டுக்கு முன்னல விழுந்து, திருடர்களைப் பிடிக்க முயன்ற கோனபட்டு வீரர்கள் போற்றுதற்குரியவராவர். தனிவுப் பஞ்சமான செட்டிநாட்டில் இந்நிகழ்ச்சி பெரிய உணர்ச்சியை உண்டாக்கிவிட்டது. கோனபட்டு வீரர்களே! சபாஷ்! உங்கள் வீரம் வாழ்க.

## இன்னும் பார்ப்பனருக்கு அடிமையா?

அகில மலாய் செட்டியார் வர்த்தக சங்கம், மலாய் இந்தியப் பாதுகாப்பாளர் திரு ஜே. ஏ. திவி அவர்களுக்கு கோட்டையூரில் கொடுத்த வரவேற்பில் தங்கள் சமூகத்தில் அறிஞர்களும், தியாகிகளும், திறமை வாய்ந்த பத்திரிகாசிரியர்களும், முதுபெரும் புலவர்களும், ராஜாக்களும், ஜமீன்தார்களும் வீற்றிருக்க, ஒரு பார்ப்பனரையழைத்து தலைமை தாங்கச் செய்தது வருந்தத் தக்கதெனவும், இனி எத்தலைவர்களையும் வரவேற்க முனைந்தால் தங்கள் சமூகத்திலுதித்த அறிஞர் பெருமக்களையே தலைமை வகிக்கச் செய்து, சமூகத்தைக் கௌரவிக்க வேண்டுவது மிக அவசியமெனவும் நகரத்தாரில் ஒருவர் எழுதுகிறர்.

## நோட்டீஸ்

### சிவகங்கை சப்கோர்ட்டு O. S. No 125 of 47

நாகசுந்தரம் பிள்ளை பவர் ஏஜண்டு M. V. சுப்பிரமணிய பிள்ளை மூலம் } வாதி

காமாக்ஷிஅம்மாள் ——— பிரதிவாதி

பிரதிவாதிக்குத் தெரிவிப்பது என்னவென்றல் வாதிக்குப் பிரதிவாதி 21-8-42 ரூ 4000 க்கு ரிஜிஸ்தர் ஒத்திப்பத்திரம் எழுதிக் கொடுத்திருப்பதில் அந்த ஒத்தி தொகையை வரப்பற்றவும், வாடகைப் பாக்கி ரூ 437-5-3 ஐ வரப்பற்றவும் வாதி பிரதிவாதிபேரில் வியாச்சியம் செய்து அதற்கு 23-12-1947 வாயிதா ஏற்பட்டிருப்பதால் பிரதிவாதி 23-12-47 காலை 10 மணிக்கு டிை கோர்ட்டார் முன்பாக ஆஜராகி தன் எதிர்வாதத்தைத்தெரிவித்துக்கொள்ளத் தவறினல் ஒரு தலைப்பட்சமாக பைசல் செய்யப்படும்.

கே. ஹரிஹர ஐயர்
வாதி வக்கீல்

சிவகங்கை
2-12-47

## நோட்டீஸ்

### தேவகோட்டை சப் கோர்ட்டு S. C. 90 of 1947

கனகசபை கனபாடிகள் — வாதி.

சிவகெங்கையிலிருக்கும் வெங்கடாஜலம் சேர்வை குமாரர் வேலுச்சாமி சேர்வை } பிரதிவாதி

டிை பிரதிவாதிக்கு கோட்டீஸ்.

உம்மிடமிருந்து ரூ 648-8-0-ஐ பின் வட்டி வியாஜ்யச் செலவு சகிதம் வசூலிக்க வாதி பிருதுசெய்து 19-12-47உ வாயிதா ஏற்பட்டிருக்கிறது. ஆக்ஷேபனை இருந்தால் 19-12-47உ பகல் 10 மணிக்கு கோர்ட்டில் ஆஜராகித் தெரிவித்துக் கொள்ளவும்.

டி. எஸ். ராஜகோபால அய்யர்
வாதி அட்வகேட்.

தேவகோட்டை
3-12-47

## பழிக்குப் பழி ஒழிக!

—:o:—

சிக்கியர்கள் பழிக்குப் பழி வாங்கும் மனப்பான்மையை விட்டொழிக்க வேண்டுமென புது டில்லி காந்தி மைதானத்தில் நவம்பர் 28-உ நடந்த பொதுக் கூட்டமொன்றில் மகாத்மா காந்தி கேட்டுக்கொண்டார். குரு நானக் பிறந்த தினத்தை யொட்டிக் கூடிய அக்கூட்டத்திற்கு லக்ஷத்திற்கு மேற்பட்ட சிக்கியர்கள் வந்திருந்தனர். ஷேக் அப்துல்லாவும் தன்னுடன் அங்கு வந்திருப்பது கண்டு சந்தோஷப்படுவதாயும் குறிப்பிட்டார். அவர் மேலும் கூறியதாவது:—

"இனியாயினும் சிக்கியர் தங்கள் முஸ்லிம் சகோதரர்பால் வேறு விதமாக நடந்து கொள்வரென்றும், கெட்ட பழக்கங்களை விட்டு விடுவரென்றும் நம்புகிறேன். குரு கோவிந்தின் உபதேசத்தை அவர்கள் மறக்கக் கூடாது. எந்த ஹிந்துவோ சிக்கியரோ அல்லது முஸ்லிமோ எப்பிழை செய்தாலும் அதை என் பிழையென்றே நான் கருதி வருகிறேன்."

குரு கோவிந்தரின் உண்மை உபதேசங்களையே சிக்கியர் பின்பற்ற வேண்டுமென ஷேக் அப்துல்லாவும் கேட்டுக்கொண்டார். "இந்த நன்னாளில் குருவின் போதனைக்குப் புறம்பாகச் செய்வதில்லையென ஒவ்வொரு சிக்கியரும் பிரதிக்ஞை செய்து கொள்ளவேண்டும்.

"நவகாளி, ராவல்பிண்டி, லாகூர், எல்லைப்புறம் போன்ற இடங்களில் முஸ்லிம்கள் செய்த அட்டூழியங்கள் கண்டு ஒவ்வொரு இந்திய முஸ்லிமும் வெட்கித் தலை குனிய நேர்ந்திருக்கிறது. பெண்டிரையும் பாலரையும் கொன்று குவிக்குமாறு, திருக்குர்ஆன் போதிக்கவில்லை. கிரந்த சாகிபோ, கீதையோ அவ்வாறு விதிக்கவில்லை.

"எதிரிகளின் கையில் ஹிந்துக்களோ சிக்கியரோ சிக்கி மடிவதை தம் உயிரைக் கொடுத்தாயினும் தவிர்ப்பதென காஷ்மீரிகள் சங்கல்பம் செய்து கொண்டிருக்கின்றனர்.

"தினந்தோறும் மகாத்மாஜி செய்யும் உபதேசத்தை ஒருவரும் பின்பற்றுதது கண்டு வருந்துகிறேன். காஷ்மீரிகளோவெனில் அவருடைய போதனையைக் கடைப்பிடிக்கின்றனர். காஷ்மீரம் இந்தியாவுக்கு வழிகாட்டியாகத் திகழுமென நம்புகிறேன். அங்கு எல்லா மதத்தினரும் சகோதரர் போல் வாழ்ந்து வருகின்றனர். என்னைப் பொறுத்தவரை ஹிந்து சிக்கியரின் மனைவி மக்களைத் என் சகோதரிகள் புதல்விகளைப் போலவே பாவிக்கிறேன்.

'ஸத் ஸ்ரீ அகால்' என்னும் கோஷத்தின் மெய்ப் பொருளையும் கடவுளை அடைய அன்பின் வழியாகவே அணுகவேண்டுமென்றும், அம்மார்க்கத்தை விட்டு வேறு பாதையைக் கடைப்பிடிப்பதைவிட உயிரையே அர்ப்பணம் செய்ய வேண்டுமென்றும் குரு நானக் கூறியிருப்பதை சிக்கியர் பின்பற்ற வேண்டும்.

"குரு நானக் உலக சமுதாயத்துக்கே குருவென்பதை மறக்கக் கூடாது. கடவுளுக்கெதிரே பல்லாயிரம் தடவை தாள் பணிய வணங்கிவிட்டு, அவருடைய கட்டளைகளையே மீறி நடப்பதால் என்ன பயன்? இந்திய சுதந்திரத்தின் கொடியை சிக்கியரின் பெயர் போன நெஞ்சுறுதி, அன்பு மார்க்கமாக உயர்த்த வேண்டுமேயன்றி வைஷம்யத்தாலல்ல."

## சோவியத் கோடீஸ்வரர்கள்

ரஷ்யா பொதுவுடமை நாடுதான். எனினும் அந்நாட்டிலும் பணக்காரர்கள் இருக்கிறார்கள். முதலாளித்துவ நாடுகளில் பலவித காரணங்களால் கோடீசுவரர்கள் ஆகிறார்கள். ஆனால் ரஷ்யாவில் திறமை, தேர்ச்சி, நிபுணத்துவம் ஆகியவற்றினால் தான் பணக்காரர் ஆக முடியும்.

காலஞ் சென்ற டால்ஸ்டாயின் மருமகன் அலெக்ஸி டால்ஸ்டாய் பிரசித்திபெற்ற எழுத்தாளர். அவர் எழுதிய பீடர் நாவலைப் படம்பிடிக்க சர்க்காரே, 30 லட்சம் ரூபிள்கள் கொடுத்து உரிமையைப் பெற்றனர். ஒரு ரூபிள் என்பது பனிரெண்டு அணாவுக்குச் சமானம். இலக்கியத்துக்கான ஸ்டாலின் பரிசுகளை இரண்டு தடவைக்குமேல் வாங்கியிருக்கிறார். ஒவ்வொரு பரிசுக்கும் 2 லட்சம் ரூபிள்கள் கிடைக்கும். லெனின்கிராட், மாஸ்கோ, கிரிமியா, காகஸஸ் இங்கெல்லாம் பங்களாக்களைச் சொந்தமாகக் கட்டிக்கொண்டிருக்கிறார். மோட்டார்கள், வேலைக்காரர்கள் எல்லாம் உள்ள பிரபுவாக வாழ்கிறார்.

'அமைதியாக ஓடும் டான்' என்கிற நாவலை எழுதியவர் மைக்கேல் ஷோலோகாவ். இந்த நாவல் மட்டும் பரபரப்பாக ஒரு கோடி பிரதிகள் விற்றிருக்கின்றன. ஆனால் ஷோலோகாவ் 'அமைதியாக ஓடும் டான் நதி'க்கரையில் வெஸ் ஜென்ஸ்கியா என்கிற கிராமத்தில் சாந்தமான வாழ்க்கை நடத்துகிறார். எழுத்தாளரைப் போலவே நடிகர்கள் ஐஸன்ஸ்டீன், புடாவ்கின் ஏராளமாகச் சம்பாதிக்கிறார்கள். மாஸ்கோவில் இசை நாடக நடிகர் கோஸ்லாவ்ஸ்கி ஒரு நாள் நாடகத்துக்கு 15,000 ரூபிள் வாங்குகிறார். அவர் அபாரச் சம்பளம் வாங்குவதை எதிர்த்து 'பிராவ்தா' பத்திரிகைப் பிரசாரம் செய்தது. உடனே கோஸ்லாவ்ஸ்கி வேலையை விட்டு நின்றுவிட்டார். அவர் பாட்டு இல்லாமல் போகவே நாடகம் மங்கிவிட்டது. பின்பு சர்க்காரே அவரை அழைத்து, அதே சம்பளத்தில் அமர்த்திக் கொண்டது.

யுத்தத்திற்குப் பின் ராணுவத்தினர் ஏராளமாகச் சம்பாதிக்கிறார்கள். மாதம் 3000 முதல் 5000 ரூபிள்கள் வரைச் சம்பாதிக்கிறார்கள். அதே போலவே விஞ்ஞானிகளும் பொருளீட்டுகிறார்கள். பிரபலமான ஸ்டார்மோவிக் விமானத்தைக் கண்டுபிடித்த இல்யுஷின் மட்டும் 6 லட்சம் ரூபிள்கள் பரிசு பெற்றார்.

"ஹிந்துஸ்தான்"

—

15-7-47 சென்னை சர்க்காரின் உத்திரவில் 23 ஜில்லா போர்டுகளுக்கும் சாதாரணத் தேர்தல்களின்படி தெரிந்தெடுக்கப்பட்ட புதிய மெம்பர்கள் 1-12-47 முதல் பதவியேற்க இருந்ததை இந்த ஜில்லா போர்டுகளுக்கு இன்னும் தேர்தல்கள் நடத்தப்படாததால் 1-4-48க்கு சென்னை சர்க்கார் ஒத்திவைத்துள்ளனர்.

## நோட்டீஸ்

### தேவகோட்டை

சப்கோர்ட்டு

1947ஞ E. P. 150 in

1934ஞ O. S. 209

க. புதுவயல் எ. அ. அ. வீரப்ப செட்டியார் எஸ்டேட். ஷை எஸ்டேட் ரிஸீவர் N. வெங்கிடாஜலமய்யர் } மனுதார் 2-ம் வாதி

க. புதுவயலிலிருக்கும் லேட் குமரகுருபரன் செட்டியார் சம்சாரம் உமையாள் ஆச்சி } எதிர் மனுதார் 2-ம் பிரதிவாதி

**ஷை 2-ம் பிரதிவாதிக்கு நோட்டீஸ்**

ஷை நம்பர் அடமான டிக்கிரியை மனுதார் E. P. 38/44-ல் நிறைவேற்றியதில் அதன் Intimation ஆக தாவா மனுவை Treat செய்து கொண்டு அடமான சொத்துக்களை ஏலத்துக்குக் கொண்டு வருவதில் ஷை சொத்தின் ஏல இஸ்தியாரின் ஷரத்துக்களை நிர்ணயம் செய்வதற்காகவும், மதராஸ் ஹைகோர்ட் அப்பீல் 238/36-ன் செலவு தொகை ரூ. 395—4—0 மனுதாருக்கு எதிர் மனுதாரிடமிருந்து கிடைக்க வேண்டியதாக தாவா Execution Petition-ல் Include செய்யவேணுமென்றும் மனுதார் E. A. 367/47-ல் மனுக் கொடுத்திருப்பதில், ஷை மனுவின் ஆக்ஷேபணைக்கும் 12-12-47-ல் வாயிதா ஏற்பட்டிருக்கிறது. ஷை தேதியில் கோர்ட்டில் ஆஜராகாவிடில், ஷை விஷயங்களை Exparte ஆகத் தீர்மானிக்கப்படும்.

A. சுப்ரமணிய ஐயர்
மனுதார் வக்கீல்.

தேவகோட்டை 28—11—47.





# கப்பலோட்டிய தமிழன்

## வ. உ. சி. நினைவு நாள்

### நாடெங்கும் கொண்டாட்டம்

—(●)—

**கோனபட்டு**

இவ்வூர் தமிழவேள் தமிழ் மன்றச் சார்பில் 21-11-47 மாலை 4 மணிக்கு திரு வ. உ. சிதம்பரம் பிள்ளை நினைவு நாள் திரு இராம சண்முகம் செட்டியார் அவர்கள் தலைமையில் கொண்டாடப் பெற்றது. வித்வான் திரு மெ. சுந்தரம், பள்ளத்தூர் திரு சுப. அருணாசலம் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

**சண்முகநாதபுரம்**

சண்முகநாதபுரத்தில் செந்தமிழ்க் கழகத்தாரால் வ. உ. சிதம்பரனாரின் திருவுருவப் படம் ஊர்வலம் வந்தது, ஜவஹர் சதுக்கத்தில் வித்வான் திருவாளர் க. தேசிகன் அவர்கள் தலைமையின் கீழ் பொதுக் கூட்டம் நடைபெற்றது. அதுபோழ்து நிகழ்ந்த சொற்பொழிவுப் போட்டியில் புதுவயல் அழ. சேதுவீரப்பனும், காரைக்குடி ராம. அருணாசலமும், புதுவயல் பெரி. சிவனடியானும் பரிசு பெற்றனர். பல பெரியார்கள் சொற்பொழிவாற்றினர்.

**மேலைச்சிவபுரி**

மேலைச்சிவபுரி பாரதியார் வாசகசாலையின் சார்பாக 22-11-47 மாலை 4 மணிக்கு திரு வ. உ. சிதம்பரனார் அவர்களின் நினைவு நாள் விழா இவ்வூர் கணேசர் செந்தமிழ்க் கல்லூரி தமிழாசிரியர் திரு க. சின்னத்துரை அவர்களின் தலைமையில் கொண்டாடப்பெற்றது. ஆசிரியர் திரு வேங்கடராம ஐயர், திரு சொ. மாணிக்கம், க. செ. கல்லூரி முதல்வர் திரு க. ஆறுமுகன், ஆசிரியர் திரு நடேச ஐயர், சு. இலக்குமணப்பெருமாள் முதலியோர் வ. உ. சி. யைப் பற்றிப் பேசினர்.

**வலையபட்டி**

வலையபட்டி சுதந்திர சூரிய சங்கத்தின் சார்பாக வ. உ. சிதம்பரம் நினைவு விழா வித்வான் திரு மா. சுப்பிரமணியபிள்ளை தலைமையில் நவ 26உ கொண்டாடப்பட்டது. அவ்வமயம் திரு கா. சிவலிங்கம், திரு மு. சங்கரலிங்கம் B. Sc, திரு சுப. முத்துராமன், திரு கதி. சுந்தரம் முதலியோர் சொற்பொழிவாற்றினார்கள்.

**புதுவயல்**

சரஸ்வதி சங்கத்தின் சார்பில் சென்ற 22-11-47 திரு வ. உ. சிதம்பரம்பிள்ளை தினமும் 26வது ஆண்டு 7 வது மாதச் சிறப்புக் கூட்டமும் திருப்பத்தூர் ரேஞ்சு டிப்டி இன்ஸ்பெக்டர் திரு கம்பன் கனகராஜ் அவர்கள் தலைமையில் ஒருங்கே நிகழ்ந்தன. அவ்வமயம் திருவாளர்கள் வீர. இராமநாதன் M. Sc. அவர்களும் அழகு வீரப்பன் அவர்களும், வள்ளியப்பன் அவர்களும், வித்தியாசாலை மாணவ மாணவிகளும் சொற்பெருக்காற்றினர். தலைவர் முடிவுரைக்குப் பின்னர் திரு சா. சிதம்பரம் செட்டியாரவர்கள் நன்றி நவில தமிழ் வாழ்த்துடன் விழா இனிது நிறைவெய்தியது.

**நாட்டரசன்கோட்டை**

இவ்வூர் ஸ்ரீ ராமவாசம் ரிக்ரியேஷன் கிளப்பினரால் திறவப்பட்டிருக்கும் வ. உ. சி. பிரசங்க மேடையின் சார்பில் 'கப்பலோட்டிய தமிழன்' வ. உ. சி. நினைவுநாள் 25-11-47 மாலை 5-30 மணிக்கு திரு கண. உல. வெ. கண. கண்ணப்பச் செட்டியார் அவர்களின் தலைமையில் மிக்க விமரிசையாகக் கொண்டாடப்பெற்றது. அது சமயம் திருவாளர்கள் அன்பு கருணையானந்தா, சுந்தரராஜ சர்மா B. A. L. T. திரு S. குழந்தைவேலு, S. ராமசாமி, S. லட்சுமணன் முதலியவர்கள் சொற்பொழிவாற்றினர். 'விஞ்சுதுரை—சிதம்பரம்பிள்ளை தர்க்கம்' ஜெயராமன் நாராயணன் என்ற மாணவர்களால் நடிக்கப்பெற்றது.

கம்பன் சிறுவர் கழக சார்பில் 23-11-47 மாலை வ. உ. சி. படத்துடன் ஊர்வலம் வரப்பெற்றது. பின் ச. இராமர் உயர்நிலைப் பள்ளிக் கட்டிடத்தில் இப்பள்ளித் தலைமையாசிரியர் உயர்திரு கே. என். இராமய்யர் எம். ஏ. எல். டி. அவர்கள் தலைமையின் கீழ் கூட்டம் நடைபெற்றது. திரு பண்டித வீரராகவய்யர், திரு பழ. பழனியப்பன், திரு மு. செல்லையா பி. ஏ., திரு க. சொக்கலிங்கம் ஆகியோர் அண்ணலின் பெருமைகளைக் கூறினர்.

**ஆவினிப்பட்டி**

ஆவினிப்பட்டி விவேகானந்தர் கல்விக்கழகத்தில் 24-11-47 உ மாலை 3-30 மணிக்கு கழகத் தலைமை ஆசிரியர் திரு K. திருவேங்கடமய்யங்கார் தலைமையில் கொண்டாடப்பெற்றது. அவ்வமயம் கழகப் பழைய மாணவர் திரு A. சொக்கலிங்கம், கழக உதவி ஆசிரியர் திரு R. சுப்பிரமணியய்யர் கழக மாணவர்கள் முதலானவர்கள் சிதம்பரம் பிள்ளையின் வரலாற்றை விரிவாக எடுத்துரைத்தார்கள்.

**கண்டவராயன்பட்டியில் சிதம்பரனார் பெயரால் வீதி**

18-11-47 இவ்வூர் பணிச்சாருடையவர் தர்ம கலாசாலையில் மாலை 5 மணிக்கு காரைக்குடி நகர சபைத் தலைவர் திரு ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் தலைமையில் வ. உ. சி. யின் நினைவு விழா சிறப்புற நடைபெற்றது. மாலை 3 மணிக்கு சிறுவர், சிறுமியர் நூற்புப் போட்டி திரு அள. சுப. சேதுராமன் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் தேவகோட்டை நகர சபைத் தலைவர் திரு அள. அரு. சோமநாதன் செட்டியார் அவர்கள் தேசியக் கொடி ஏற்றுவித்தார்கள். திண்டுக்கல் மணிபாரதி, ஆ. தெக்கூர் ஹைஸ்கூல் ஆசிரியர் மார்க்கபந்து சர்மா எம். ஏ., மிதிபாலன்பட்டி சி. சா. இராமசாமி செட்டியார் ஆகியோர் சொற்பெருக்காற்றினர். பாகனேரி சித. கண்ணப்பன் அவர்கள் வ. உ. சி. படத்தைத் திறந்து வைத்தார்கள். திருப்பத்தூரிலிருந்து பொன்னமராவதி செல்லும் மெயின் வீதிக்கு வ. உ. சி. வீதியென பொதுமக்களால் பெயரிடப்பட்டது.

**கோம்பை**

கோம்பை தமிழ் இல்லத்தின் சார்பில் நவ 23-உ மாலை வ. உ. சி. திருவுருவப்பட ஊர்வலத்துடன் வ. உ. சி. திருநாள், மதுரை மாவட்டக் கல்வி அதிகாரி திரு நெ. து. சுந்தரவடிவேலு எம். ஏ. எல். டி. அவர்கள் தலைமையில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. கந்தசோலைக் கவிஞர் திரு கா. ம. காளிதாசன் அவர்கள் சொற்பொழிவாற்றினார்கள். அடிமையின் சின்னமாக இன்னும் சென்னையில் விளங்கும் ஜார்ஜ்டவுனை சிதம்பரம் நகர் என மாற்றவேண்டுமென்றும், சுதந்திர இந்தியாவில் கட்டப் பெறும் முதற்கப்பலுக்கு வ. உ. சி. யின் பெயரிட வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேறின. தலைவர், கோம்பையில் ஆரம்பிக்க இருக்கும் உயர்நிலைப்பள்ளிக்கு வ. உ. சி. யின் பெயரிடவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்.

**நச்சாந்துபட்டி**

26-11-47 பிற்பகல் 3 மணிக்கு தமிழரசுக்கழக ஆரம்ப விழா ஆரம்பமானது. பள்ளிப் பெண்கள் இசை விருந்தளித்தார்கள். தொடர்ந்து திரு வீர. கிருஷ்ணன் வரவேற்புரை நிகழ்த்தினர். அடுத்தபடியாக திரு கே. எம். ஷெரீப் தலைமையில் கூட்டம் துவங்கியது.

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர், சென்னை திருமதி, சரஸ்வதி பாண்டுரெங்கம் அம்மையார் தமிழரசுக் கழகத்தைத் திறந்துவைத்து அரியதோர் சொற்பொழிவாற்றினார்கள். பின்னர் கப்பலோட்டிய தமிழன் வ. உ. சிதம்பரனாரின் படத்தை, 'தமிழ்க்குரல்' ஆசிரியர் திரு கு. மா. பாலசுப்ரமணியம் திறந்துவைத்துப்பேசினார்.

(முதல் பக்கத் தொடர்ச்சி)

னர், தமிழ் வரலாற்றில். ஆனால் துய்த்த அரச இன்பத்தைத் துாஎறிந்த மன்னர்கள்—சொந்த மக்களோடு பொருள் காரணமாகப் பிணக்கு ஏற்பட, அதற்காகக் கொண்ட கொள்கையினின்றும் மாருது, குவலயத்தையே கொடையாகக் கொடுத்து விட்டுக் கருத்து அழிந்தமையால் காட்டை அடைந்து வடக்கிருந்த வய வேந்தர்கள்-வரலாற்றில் சிலரே இடம் பெறுவர். அவர்களிலே முன்னிற்பவன் தான் கோப்பெருஞ் சோழன். அரசனின் இந்தத் "துறவுக் கோல"த்தைக் காட்டிலும், மற்ரெரு நிகழ்ச்சி மனத்தைக் கொள்ளை கொள்கின்றது. அது என்ன?

வேற்று வேந்தனது நாட்டில் புகழ் நிறைந்த புலவர் திலகமாய் விளங்கிய பிசிராந்தையார், கோப்பெருஞ் சோழனது புகழே சிறப்பாக, நட்பே பற்றுக் கோடாகப் போற்றி, இத்தகைய தொரு துயர் சூழ்ந்த நேரத்தில், இங்கே தாமும் உயிர் விடும் பொருட்டு வருதல்.

சோழனை மனக் கண்ணுல் கண்டார் புலவர். காண்பதற்குக் கருவியாய் இருந்தன இரண்டு. அவை தாம், அவனுடைய புகழும், உள்ளத்தெழுந்த உணர்ச்சியாகிய நட்பும்.



## உள்ளத்து உணர்ச்சி

இரண்டையுமே பற்றுக் கோடாகக் கொண்டு பறந்துவந்தான், பைந் தமிழ்ப் பாவலன். ஏன்? உயிர்போகுங் காலத்தாவது, இரண்டு உயிரும் ஒன்ருக இணைந்து செல்லட்டுமே என்றுதான். அரசன் சோழநாட்டவன். புலவர் பாண்டி நாட்டில் உள்ளவர். நாட்டு வேற்றுமை இவர்கள் நட்புக்கு நலிவு செய்யவில்லை. சேய்மையாகிய இடைவெளி, உள்ளத்து உணர்ச்சிகளைச் சிதைக்கவில்லை. அதனுலேதான் துன்பத்தில் பங்கு கொள்ள வந்தான், வாழ்விலேயே துன்பத்தைக் கண்டறியாத காரணத்தால், யாண்டு பல வாகிடினும் நரை இல்லாத நற்றமிழ்ப் புலவன்.

மேற்கூறிய இரண்டு செய்திகளைக் காட்டிலும், பெருவியப்பு நல்கிப் பெருமிதம் அடையச் செய்வது மூன்ருவது நிகழ்ச்சி. அதுதான் சொல்லும், செயலும். "பிசிராந்தை கட்டாயம் வருவான்" என்றுரைத்த கோப்பெருஞ் சோழனது மெய்யுணர்வுப் பெருமையையும், அச்சொல் பழுதாகாதபடி அப்படியே வந்துவிட்ட பிசிராந்தையின் மெய்யுணர்வும் வியக்குந்தோறும் வியக்குந்தோறும், வியப்பானது கையிகந்து செல்கின்றது.

உறுதியாக வருவான் என்பதே சோழனுடைய சொல். வந்து இறப்பில் இடங்கொண்டது, புலவனின் செயல். உண்மையான உணர்வு அலைகள் இருவர் உள்ளத்திலும் கரை பொருதலினுல் ஒருவர் நினைப்புப் பிறிதொருவரைத் தாக்கி வினை ஆற்றச் செய்தது. காவலன் சொல்லைக் காப்பாற்றியது, கன்னித் தமிழ்ப் புலவனின் ஒன்றிய உணர்ச்சி தானே! அதனுலேதான் பொத்தியாரின் வியப்பு, வரையறை கடக்கின்றது.

"ஆதலால், தன் ஆட்சி இயங்காத பாண்டிய நாட்டில் வாழும் சான்ருேனை பிசிராந்தையாரின் உள்ளம் தன்னிடம் பொருந்தப் பெற்ற புகழையுடைய அத்தகைய கோப்பெருஞ் சோழனை இழந்த இந்த நாடு, இனி எத்தகைய துன்பத்தை அடையுமோ, இது பெரிதும் இரங்கத் தக்கது" என்று இரங்கிக் கூறி முடிக்கிருர், பாவினைப் பாடிய பொத்தியார்.

இச் செய்யுளின் போக்கு, புலமைக்கு விருந்தென்பதை அறிஞர் அறிவர். செய்யுளின் இடையே வியப்பு; இறுதியிலே உருக்கம். ஒரு புலவர் மற்ருெரு புலவரை மனங்குளிர உள்ளன்புடன் பாராட்டும் கட்டம் இதில் இருக்கிறது "பிறன் நாட்டுத் தோற்றஞ் சான்ற சான்ருேன்" என்றும், "அது பழுதின்றி வந்தவன் அறிவும்" என்றும், பிசிராந்தையார் பாராட்டப் படுகிருர், பொத்தியாரால். இது போன்ற இடங்கள் இன்னும் சில உள. கபிலரும், பரணரும் இங்ஙனம் பாராட்டப் பெறுகின்றனர், ஔவையார் போன்ற புலவர் பெருமக்களால். புலவர், உடன் இருத்தலையும் அவர்க்குப் பரிசில் நல்குவதையுமே, பெரும் பேறு என எண்ணியிருந்த மன்னர் வழி வந்தவனுகிய கோப்பெருஞ் சோழனும் பிசிராந்தையார் கெஞ்சத்தைத் தனக்கு உரிமையாகப் பெற்றதை ஒரு பெருமையென எண்ணுகிருன். அதை எடுத்து மொழிகிருர் பாட்டுப் பாடியவர்.

இத்தகைய அரிய பெருமைக்கு நிலைக்களனுய் விளங்கிய இரு உயிர்களும் இவ்வுலக வாழ்வு நீத்தது குறித்து எவரும் இரங்காமல் இரார்; இருவருடைய இறப்பையும் அறிந்த நாட்டு மக்களின் நவிலொணுத் துன்பத்தையே தம் பாட்டில் படம்பிடித்துக் காட்டுகிருர் பொத்தியார். நல்லோரால் நாடு நலம் பெறுதலை அறிந்தோர், அவர் இல்லாது மறைதற்கு இரங்காது இரார் அல்லவா? அது போலத்தான் இருவர் அருமையும் அறிந்த பொத்தியார், அவர்களைப் போலவே தானும் வடக்கிருந்து, உயிர் துறந்து, சென்ற இரு உயிர்களோடும் ஒன்றியிருப்பாராயினர். தேண்மை உணர்ச்சியின் ஆண்மையினை மூன்று உயிர்களும் உலகிற்கு எடுத்தோதி மறைந்தன. மறைந்தும், அவைகளை இணை பிரியாது வைத்தது ஒன்றிய உள்ளத்து உணர்ச்சிதானே! அவ் உணர்ச்சியை நாமும் அடைந்து நானிலத்தில் பழுதிலாது வாழ முயல்வோம்!

— —

### ஜவஹர் தினம்

21-11-47 தேதி சங்கரபுரம் காங்கிரஸ் விவசாயிகள் சங்கத்தின் சார்பில் சங்கக் கட்டிடத்தில் நேருவின் 59 வது பிறந்த தினக்கொண்டாட்டம் நடைபெற்றது. சங்கக் காரியதரிசி பி. லெ. சீனிவாசன் அவர்களால் தேசிய மூவர்ணக் கொடியேற்றி வைக்கப்பெற்றது. பண்டித ஜவஹர் படத்தை திரு கரு. கண்ணப்பன் அவர்கள் திறந்து வைத்தார்கள். திரு சி. பெரியகருப்பன் அவர்கள் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் பல அன்பர்கள் பேசினர்.



Edited, Printed and Published by S. MURUGAPPAN at the Pandian Press, Magalir Illam, Devakottai Road, S. I. R.

